[5th February 1959

SRI T. T. DANIEL : Sir, because there has been a great rush to get admissions in these institutions, will the Government consider the desirability of starting some more polytechnics and is it a fact that some applications are pending in this regard before the Government?

THE HON. SRI C. SUBRAMANIAM : Government intend to start a few more polytechnics and in fact there are some applications pending.

SRI V. K. KOTHANDARAMAN : தென் ஆற்காடு, வட ஆற்காடு, கன்னியாகுமரி ஆகிய மூன்று ஜில்லாக்களில் தவிர மற்ற ஜில்லாக்களில் மட்டிலும் தொழிற் பள்ளிகள் இருக்கின்றதென்று மேஜையில் வைக்கப்பட்டுள்ள ஸ்டேட்மெண்டிலிருந்து தெரிகிறது. இந்த மூன்று ஜில்லாக்களிலும் உடனடியாக இந்த ஆண்டில் தொழிற்பள்ளிகளை ஆரம்பிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தென் ஆற்காடில் பாலிடெக்னிக் இருக்கிறது. வட ஆற்காட்டிலும் கன்னியாகுமரியிலும் பாலிடெக்னிக் இல்லை. இந்த இரண்டு ஜில்லாக்களிலும் அடுத்த வருஷம் தொழிற்பள்ளிகளை ஆரம்பிக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

## *Village officers*

*29 *Q*.—SRI C. MUTHIAH : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

கிராம உத்தியோகஸ்தர்களின் பதவிகளுக்கு சர்விஸ் கமிஷன் மூலம் நபர்களைத் தேர்ந்தெடுக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI C. MUTHIAH : இப்போது கிராம உத்தியோகஸ்தர்கள் இரு முறையில் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களை நியமிக்கும் விஷயத்தில் சர்க்கார் இரு கொள்கையை கையாள்கிறது. இசும் பாத்தியம், இசுமில்லாத பாத்தியம் என்ற இரு முறையில் அவர்கள் நியமிக்கப்படுகிறார்கள். அவர்களை சர்விஸ் கமிஷன் மூலம் நியமிக்க விட்டாலும், ஒரே முறையில் அவர்களை நியமிக்கும் வகையில் தங்கள் கொள்கையை மாற்றிக்கொள்ள அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M A MANICKAVELU : சட்டப் பிரகாரம் இசும் பாத்தியம் இருக்கிறது. இந்தப் பிரச்னை ஒரு பெரிய பிரச்னை. இது அரசாங்கத்தின் ஆலோசனையில் இருக்கிறது.

SRI K. B S MANI : கிராம உத்தியோகஸ்தர்களை நியமிக்கும் விஷயத்தில் பரம்பரை பாத்தியதை முறை தஞ்சாவூர் ஜில்லாவில் இல்லை. அந்த முறை தென் ஆற்காடு ஜில்லாவில் இருக்கிறது. பல கொலைகளும், கொள்ளைகளும், கலவரங்களும் கிராமங்களில் நடப்பதற்கு பரம்பரை பாத்தியதை முறை ஏதுவாக இருக்கிறது. ஆகையால் இந்த முறையை நீக்குவதற்கு ஒரு அவசரச் சட்டத்தைக் கொண்டுவர அரசாங்கம் முன் வருமா ?

SRI A. GOVINDASAMY : I take strong objection to the words 'Kolai' and "Kollai" சில இடங்களில் இந்த முறையால் கொலை, கொள்ளைகள் நடக்கின்றன என்று கனம் அங்கத்தினர் சொல்கிறார்.

THE HON. SRI M. A MANICKAVELU : இதனால் கொலைகளும் கொள்ளைகளும் நடப்பதாக எனக்குத் தெரியவில்லை.

5th February 1959]

SRI A. R. SUBBIAH MUDALIAR : கிராம உத்தியோகஸ்தர்களை நியமிக்கும் விஷயத்தில் பரம்பரை பாத்தியதையை எடுத்துவிட வேண்டுமென்று சர்க்கார் ஆலோசித்து வருகிறதா ? அப்படியானால் எப்பொழுது அது அமுல் நடத்தப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பரம்பரை பாத்தியதையைப் பற்றி மட்டுமன்றி, பொதுவாகவே கிராம உத்தியோகஸ்தர்களை வேறு எந்த முறையில் நியமிக்கலாம் என்பது பற்றியும் ஆலோசனை செய்யப்பட்டு வருகிறது.

*Retirement age for industrial workers*

* 30 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state the superannuation age fixed for clerks and industrial workers by the Standing Labour Committee?

THE HON. SRI R. VENKATARAMAN : No superannuation age has been fixed for clerks by the Standing Labour Committee.

In the old Standing Orders of some establishments certified under the Industrial Employment (Standing Orders) Act, prior to 17th September 1956, the age of superannuation for industrial workers was fixed at 55 years. In the Standing Orders of certain textile mills and industrial establishments certified after 17th September 1956, the age is fixed at 58 years. In an agreement, dated 15th April 1957, between the United Planters' Association of Southern India, Coonoor, and the plantation workers, the age of superannuation for the plantation workers has been fixed at sixty.

SRI T. T. DANIEL : Will the Hon. the Minister be pleased to state the principles that have been followed in fixing this age limit?

THE HON. SRI R. VENKATARAMAN : This is a matter for negotiation between the employers and the employees, and the Industrial Employment (Standing Orders) Act provides for the determination of any differences between the employers and the employees in this matter.

SRI S. LAZAR : இப்பொழுது அதிகப்படுத்தப்பட்டிருக்கிறவயது 60. இதற்கு retrospective effect கொடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்தமாதிரி அதிகப் படுத்தவில்லை. மூன்று ஒப்பந்தங்களை நான் படித்தேன். ஒரு ஒப்பந்தத்தில், தோட்டத் தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தில் 60 வயது என்று கண்டிருக்கிறது. அவ்வளவுதான்.

SRI S. PAKKIRISAMI PILLAI : உடல் உழைப்பு கொடுத்து வேலை செய்யக் கூடியவர்களுக்கு, வேலையிலிருந்து நீக்கப்பட்ட பிறகு பென்ஷன் இல்லாத காரணத்தினால், அவர்களுக்கு உடலில் வலு இருக்கும் வரையில் வேலை செய்வதற்கு ஒத்தாசை செய்ய, ரிடையர்